794

உ
சிவமயம்
ஸ்ரீ தியாகராஜ சுவாமி துணை

# சப்த பதிகப்பா

காரைக்குடி வாழ் நேமம் கோவில்
**அரு. அ. அரு.**
**இராமசாமிச் செட்டியார் அவர்கள்**
குமாரன்
**அருணாசலம் செட்டியாரால்**
இயற்றப்பெற்றது

முதற்பதிப்பு
இரங்கோன் மெர்க்கன்டயில் பிரிண்டிங் ஒர்க்ஸ்
என்னும் அச்சு எந்திர சாலையில்
பதிப்பிக்கப்பெற்றது
1910

*மறுபதிப்பு*
*காரைக்குடி ஸ்ரீ லெட்சுமி பிரிண்டர்சில்*
*ஆனா ரூனா அவர்களின் பேரன் மகனாகிய*
*அரு.ராம.மு. அருணாசலம் செட்டியாரால்*
*பதிப்பிக்கப்பெற்று*

**ஸ்ரீ காட்டம்மன் கோவில் கும்பாபிஷேக நாளான**
**14-09-2005** அன்று
வெளியிடப்பெற்றது.



உலகம் யாவையும் படைத்துக் காத்து அருளும் ஒன்றை இறைஎன்பர் பெரியோர். அப்பரம்பொருளை ஆணாகவும், பெண்ணாகவும் வழிபடுவோம் நாம். எனவே இறைவன், இறைவி என்று திருப்பெயர் சூட்டி மகிழ்வோம். சமய நூல்களும், பால் வேறுபாடு புலப்பட ஒரே பொருளை உணர்த்துவதான பரன், பரை என்ற சொற்களால் நமக்கு உணர்த்தும். தமிழகத்தில் அம்மைக்கு வழங்கி வந்த பழந் திருப்பெயர் 'கொற்றவை' என்பதாகும். அப்பெயரே பிற்காலத்தில் 'துர்க்கை' என்றாயிற்று.

இறை என்ற ஒன்று, பால் காரணமாக 'இறைவன்', 'இறைவி' என்று இரண்டாயிற்று. இறைவன் ஒன்றாக இருந்தது, 'பிரமன்', 'விஷ்ணு', 'சிவன்' என்று மூன்றாயிற்று. அப்படியே, இறைவியும் 'பிராமி', 'வைஷ்ணவி', 'சிவை' என்று மூன்றாயிற்று. இறைவனுக்குப் பல வேறு பெயர்களும், உருவங்களும் அமைந்தமையைப் போலவே, இறைவிக்கும் ஏற்படலாயின. ஒன்று மூன்றாகி, ஐந்தாகி, ஏழாகி, ஒன்பதாகி இன்று இறைவிக்கு எண்ணற்ற திருவுருவங்களும் திருப்பெயர்களும் விளங்கக் காண்போம்.

பிடித்த பெயருக்கு ஏற்ப மூர்த்தியைப் படைப்பதும், கிடைத்த மூர்த்திக்கு ஏற்பப் பெயரைச் சூட்டுவதும் நமது மரபு. காரைக்குடி காக்கும் தெய்வத்திற்கு, காதில் 'கொப்பு' என்னும் அணி சிறப்பாக இருத்தல் காரணமாகக் கொப்புடையாள் என்னும் திருப்பெயர் ஏற்பட்டிருக்கிறது. கொப்புடையம்மன் என்றும், கொப்புடைய நாயகி என்றும், மக்களெலாம் வாய் நிறையச் சொல்லி மகிழ்வார்கள். அம்மையின் அருள்திறத்தை நாமெல்லாம் நன்கறிவோம்.

அம்மையிடம் பேரன்பு பூண்டு அவள் பணியில் ஈடுபட்டு வழிவழி அறங்காவலர்களாக விளங்குவது அரு.அ.குடும்பம். அந்த ஈடுபாட்டின் காரணமாக, திரு அரு.அ.அரு. ராம. அருணாசலம் செட்டியாரவர்கள் அம்மையின் மீது பிரார்த்தனைப் பாடலும், வருகைப் பதிகமும் பாடி, 95 ஆண்டுகட்கு முன் வெளியிட்டுள்ளார்கள். அவர் தம் பேரன், திரு. அரு. ராம. முத்துராமன், கொப்புடையம்மனின் மூலஸ்தானமாகும் காட்டம்மன் கோவில் கும்பாபிஷேக நாளான 10-02-1960ல், அதை வெளியிட்டு மகிழ்ந்தார்கள்.

இப்போது 14-09-2005ல் நிகழும் காட்டம்மன் கோவில் கும்பாபிஷேக நாளில் அவர்தம் திருமகனும், கொப்புடையம்மன், காட்டம்மன் கோவில்களின் ஆயுள் அறங்காவலரும் ஆன **திரு அரு.ராம.மு. அருணாசலம்** வெளியிட்டு மகிழ்கின்றார்கள். தம் தந்தையாரின் பாட்டனார் 1910ல் திருவாரூர் தியாகேசர், வலயபட்டி மலையாண்டி விநாயகர், ஒ.சிறுவயல் பொன்னழகி அம்மன், பீந்தசா குமரகுருபரன், காரைக்குடி மீனாட்சி அம்மன் ஆகிய தெய்வங்கள் மீது பாடியருளிய பதிகப் பாடல்களையும், திருப்புகழையும், திருச்செந்தூர் திருப்புகழையும் நாமெல்லாம் பாடிப்பரவி பிறவிப் பெரும் பேற்றினை அடைய, கொப்புடையம்மன் பதிகப் பாடல்களோடு சேர்த்து, இந்நூலில் இணைத்து வெளியிடுவது பாராட்டிற்குரியது.

இத் தெய்வத் திருப்பணியில் திரு அரு.அ.அரு.ராம. அருணாசலம் செட்டியாரவர்களின் மகள் வழிப் பேரனான அடியேனும் பங்கேற்க வைத்த இறை திருவுளத்திற்கு பணிவும் நன்றியும் மிக உடையேன்.

14-09-2005 — கம்பனடி சூடி

பார்த்திப, ஆவணி, 29 — பழ. பழநியப்பன்



உ

சிவமயம்

# ஸ்ரீ காட்டம்மன் திருவருள்

திருவளர்ந்தோங்கும் செந்தமிழ்த் திருஞானகலை சிறந்த, உலகோர் போற்றும் தர்மமிகு நாட்டுக்கோட்டை நகரத்தார் சீலமுடன் வாழ்ந்து வரும் சிறப்புமிக்க காரைக்குடி சங்கராபுரத்தில் வஜ்ஜிரவனம் கள்ளிகாடு, நீர்சூழ்ந்த கானகம், ஆரண்யத்தின் நிருதியாகிய பூதகணங்கள் புடைசூழ தபோதனர்களின் தவ மகிழ்ந்த இடம்.

ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகி கருணைக்கடல் அன்னை தேவி பார்வதி, மூன்று தேவியராகிய - மலைமகள் சக்தி, அலைமகள் லெக்ஷ்மி, கலைமகள் சரஸ்வதி - மூவரும் ஏக ஸ்வரூபியாக காக்ஷியளித்து சிருஷ்டி, காருண்யம், சங்காரம் முத்தொழில் கர்த்தாவாகவும் கருணை பொழிந்து ஆரண்யதேவி, வனசுந்தரி, கொப்புடையம்மன், தாடங்க நாயகி, காட்டம்மன் இப்படி பல சிறப்பு நாமங்கள் பெற்று எல்லை இல்லா அருள் மழை பொழிந்து வருகிறாள். அன்னையின் அற்புதங்கள் அளவிட முடியாத ஒன்று. அனுபவித்துப் பார்த்தால் பேரின்பம், முக்தி, நிம்மதி உண்டாகும்.

க்ஷேத்திரம் - வஜ்ராரண்யம்; ஸர்ப்பக்ஷேத்திரம்; அம்பாள் கர்ப்ப கிரகம், பலிபீடம், திருக்கோபுரம், ஸர்ப்ப வடிவமாக சற்று நெளிந்து இருப்பதுவே விசேஷம். அம்பாள் சங்கார வடிவ பிரயோகமாக அரக்கவதம் செய்த கோல ஆக்ரோஷமாக அமர்ந்து காட்சியளிப்பது துஷ்ட நிக்ரஹக சிஷ்ட பரிபாலனம், தீயவற்றை அழித்து நன்மையை வளர்ப்பதாகும்.

**ஞாயிற்றுக்கிழமை** ஸ்ரீஅம்பாளுக்கு தாமரை புஷ்பம் சூட்டி செந்நிற ஆடைசாத்தி புளியோதரை நைவேத்யம் செய்து தீபம் ஏற்றி 11 வாரம் தரிசிப்பவர்களுக்கு மூதாதையர்கள் ஆசிர்வாத பலன் கிடைக்கும்; ஆத்மபலம், மனநிம்மதி, கார்ய சித்தி ஏற்படும்.

**திங்கட்கிழமை** பன்னீர் அபிஷேகம் செய்து, சந்தண திலகமிட்டு, மல்லிகை, முல்லை, வெள்ளை அல்லி புஷ்பங்கள் சூட்டி, பால் அன்னம் நைவேத்யம் செய்து, நெய்தீபம் ஏற்றி 16 வாரம் தரிசிப்பவர்களுக்கு தாயாரின் மனமகிழ்வுப் பாத்திரமாக சகல நிம்மதியும், திடசரீர ஆரோக்யமும் நிம்மதியும் உண்டாகும்.

**செவ்வாய்க்கிழமை** இளநீர் அபிஷேகம் செய்து செவ்வரளி, பிச்சி, புஷ்பம் சூட்டி, சர்க்கரை பொங்கல் நைவேத்யம் ஸகஸ்ரநாம அர்ச்சனை, ஐந்து வகை எண்ணெய் தீபம் ஏற்றி 16 வாரம் தரிசிப்பவர்களுக்கு பூமிலாபம், வியாஜ்யம்

வழக்கு வெற்றி, சரீர ஆரோக்கியம், உறவினர் பகை நிவர்த்தி, அரசபதவி, உத்யோகபலம், பந்தய வெற்றி, வாகன வசதி நிம்மதி உண்டாகும்.

**புதன்கிழமை** மருமருக்கொழுந்து, திருநீற்றுப்பச்சை, வில்வம், திருவத்தி பத்ரம், மகிழம் புஷ்பம் சூட்டி, பச்சை வஸ்திரம் சாத்தி, மதுவர்க்கம், தயிர் அன்னம் நைவேத்யம் ஸகஸ்ர நாம அர்ச்சனை, நெய் தீபம் ஏற்றி 11 வாரம் தரிசிப்பவர்கள் வித்தை புத்தி விசாலம், படிப்பு மேன்மை, பரீட்சையில் வெற்றி, கார்ய ஜெயம் உண்டாகும்.

**வியாழக்கிழமை** மஞ்சள் காப்பு, மஞ்சள் வஸ்திரம் சாத்தி, மஞ்சள் நிற புஷ்பம் சாத்தி, பருப்பு பொங்கல் நைவேத்யம் செய்து, 16 வாரம் தரிசித்து வந்தால், பெண்களுக்கும் ஆண்களுக்கும் சீக்கிரம் திருமணம் நிறைவு பெறும். புத்ர விருத்தி ஏற்படும். மலட்டு தன்மை நீங்கி நிம்மதி உண்டாகும்.

**வெள்ளிக்கிழமை** மல்லிகை, முல்லை, சம்பங்கி மலர்களும், சந்தனக் காப்பும் சாத்தி, திரிசதை அர்ச்சனை குங்குமத்தினால் செய்து, 16 வாரம் தரிசிப்பவர்களுக்கு பிரிந்த தம்பதிகள் ஒன்று கூடி குடும்ப வாழ்க்கை நிம்மதி உண்டாகும். தடைப்பட்ட திருமணம் நடைபெறும். நோய் நீங்கும், பந்துக்கள் சேர்க்கை உண்டாகும்.

**சனிக்கிழமை** தைலக்காப்பு சாத்தி, நீலநிறவஸ்திரம் சாத்தி, தயிர் அன்னம் நைவேத்யம் செய்து, 16 வாரம் தரிசிப்பவர்களுக்கு நரம்பு, எலும்பு நோய்கள் நீங்கும். மன உறுதி, காரிய சித்தி உண்டாகும்.

**பௌர்ணமி** அன்று அம்பாளுக்கு எலுமிச்சம் பழ மாலை சாத்தி, ஸகஸ்திர நாமம் சொல்லி, சர்க்கரை பொங்கல் நைவேத்யம் செய்து தரிசிப்பவர்களுக்கு பால் பசு விருத்தி, தனதான்ய விருத்தி, பந்து மித்ராதி சேர்க்கை, சகல சௌபாக்ய மேன்மை உண்டாகும்.

**அஷ்டமி** அன்று அம்பாளுக்கு 5 வகை எண்ணெய், 5 நிற திரியில், எலுமிச்சம் பழ விளக்கு ஏற்றி தரிசத்தால் ஏவல், பில்லி, சூன்ய, மாந்திரிக இடையூறு நிவர்த்தி ஏற்படும். துஷ்ட தேவதையால் ஏற்படும் கஷ்டம் நீங்கி, சகல தோஷ நிவர்த்தியுண்டாகும்.

ஜோதிஷ சரஸ்வதி

**ஸ்ரீ ராம.மா. கணேசமூர்த்தி அய்யர்**



உ

சிவமயம்

# சூசி பத்திரம்

(பொருளடக்கம்)

உ

சிவமயம்

வேலும் மயிலும் துணை

வலயமாநகர்

# மலையாண்டி விநாயகர் பதிகம்

## காப்பு வெண்பா

கன்னல் மொழிசேர் கலைமகளும் பூமகளும்
மன்னி வளர்வலய மாநகரில் - துன்னுமலை
ஆண்டிபதி கம்அதனை யாம்புகல வந்தமலை
ஆண்டிபத மேதுணை அது ஆம்.

## நூல்

கலைமாது பணிகின்ற மலைமாது பெறு ஐங்
கரத்தனே கடவு ளர்க்கா(க்)
கயமுகனை அடுசமரில் மடிய எதிர் கணேசனே
கருணை மழை பொழியும் முகிலே
சிலைதனைச் சிலை எனக் கொண்ட சிவன் உதவ வரு
சேயனே நால்வா யனே
சேவலங் கொடி உடைய கோ உனை அழைக்கத்
தினைப்புனம் சூழ்ந்து இருக்கும்

மலைமேவு சுனையோரம் மதமிகும் கரியதால்
வந்தங்கு வள்ளி என்னும்
மாதுஅவன் தோள்சார மணமுடித்து அருள்செயும்
மாவதனம் இலகு மணியே
பலகலைகள் அறியாத சிறியனேன் என்னினும்
பட்சம் வைத்தாளும் அள(ு)கா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள் உறும் வயைமா
பதியில் வளர் மலையாண்டியே 1

## மலையாண்டி பதிகம்

கை ஆறோடு ஆறு உடைய ஐயனின் சோதரா
கங்காளன் உமையி னோடு
கவறுவிளை யாடையில் மனைவியவள் வென்றிடக்
கண்டுநகை செய்த ருகினில்
ஒய்யார மாயுறுந் தேவிநீ தோற்றை என்று
ஓதஅவள் தானும் இங்கே
உள்ளவரை வினவினால் நன்றாய்வி ளங்கும் என
உனது அண்ணனைக்கேள் எனப்

பொய்யாது சொல் என்ன மாயவன் சூதுடைப்
போர்பரமன் வென்றான் எனப்
புவனங்கள் ஈன்றிடுங் கன்னிஅவ் அண்ணனைப்
பொங்கரவம் ஆவாய் எனப்
பைஅரவம் ஆகிவரு மாமனைக் காத்தருள் செய்
பாலன் எனை ஆளும் அழகா
பதியை நிகர் நவமணிகள் நிதிகள் உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே 2

கோடானு கோடி பேருக்கு அஞ்சாத அசுரனைக்
கோட்டினால் கொன்ற முதலே
குவலயம் எலாம் தொழும் ஆதியே சோதியே
குஞ்சர முகத்து ஐயனே
தேடாது தேடுவார் தேட்டற்ற தேட்டமே
தேடஅரிய ஞான மணியே
சித்தம்வைத்து ஆள்என்று நித்தநித்தம் வந்து
திருஅடியில் அலறி வீழ்ந்து

வாடாது வாடும் என் முகவாட்டமும் கண்டு
வாடாமல் இருஎன்ன நீ
மாசற்ற கருணையோடு அருள்செயாது இன்னமும்
வாளா இருப்ப தழகோ
பாடான பாடுகள் படவும்முடி யாதுஇனிப்
பக்ஷம் வைத்து அருள் செய் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள்உறும் வயைமா
பதியில் வளர் மலையாண்டியே 3

## மலையாண்டி பதிகம்

பணிசெய்து வருவிபீடணன் இலங்கை ஏகுநாள்
பார்த்து இராமன் கழல்களைப்
பணிந்து ஐயநினதுபிரி வாற்றலேன் என்னப்
பரமன் அருள் திருவடியினை
மணிவைத்து இழைத்திட்ட முடிதாங்கு முடிமீது
வைத்துவரு வழிய தனிலே
வான்நாடர் இறை ஏவ மறைஓது சிறுவனாய்
வரஉனைக் கண்டு அன்னவன்

தணிவோடு போற்றியது பூமிமிசை வையாது
சற்றுநில் என்ன வாங்கித்
தரணியில் சீரங்கமாக வைத்து அன்னோன்
தனக்கருள்செய்து ஆளும் முதலே
பணிகள்அணி பரமன்உமை உதவவரும் பாலனே
பாலன்எனை ஆளும் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள் உறும் வயமா
பதியில் வளர் மலையாண்டியே. 4

நீர்குமிழி அனையபொய் உடலைநான் நிலையாக
நிற்குமென மின்னார் களின்
நேயமே இன்பம் என அவர்கள்உறும் வீடுகள்
நித்யசா யுச்சியம் என்ன
ஆர்க்கும்அறம் என்றும் ஒரு காசளவும் ஈயாமல்
அன்னார் தமக்க ளித்தும்
அம்மாதர் ஆசையாம் கடலுள் துரும்புஎன
அழுங்கிக் கிடந்து உழன்ற

மூர்க்கனே என்றாலும் உன் பெருமை பெரியோர்
மொழிந்திடச் சிறிது கேட்டு
மோகமொடு சோகங்கள் தீர்த்துமெய் ஞானமிகு
முத்தமிழும் அருளுவை என்றே
பார்க்குள் ஓடித்தேடி இவண்வந்து நின்றனன்
பாலன்எற்கு அருள் செய் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகளுறும் வயமா
பதியில் வளர் மலையாண்டியே. 5

## மலையாண்டி பதிகம்

சிவன்ஆன நமதுஐயன் நுதலினிற் தோன்றிஎத்
திசையினும் விளையாடும் கால்
தேவர்இந் திரனோடு அமர்செய்து யாழ்வலோன்
செப்பஅவர் தம்மை யாண்டு இவ்
அவனியைத் தரும்அயனை ஓம்எனும் பொருள்வினவி
அரியசிறை தன்னில் வைத்தன்று
அதனைப் படைக்கநம் ஐயன் வேண்டிடுதலால்
அவ்அயன் சிறையை நீக்கி

நவவீரர் கணநாதர் லெக்ஷரொடு நந்திதொழ
நல்கையிலை வீற்று இருந்து
நாரதன் வேள்விவரு தகர்ஏறி உறுசாமி
நாதனின் தமைய எனது
பவமெலாம் போக்கிஇப் போதருள் புரிந்திடப்
பாடுகவி கேட்கும் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள்உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே. 6

மெச்சுநற் பச்சைமயில் ஏறி அக் கயிலையொடு
விண் எட்டு மாதிரத்தை
வேகமொடு முருகவேள் சுற்றிவரு முன்னதாய்
விமலனைச் சுற்றி வந்துஅங்கு
இச்சையுடன் மாங்கனியை வாங்கிமுன் தின்றவா
இமயமலை ஈன்று எடுத்த
எழிலான மகவாகி நம்தந்தை தனைநாடி
இயல்பான தவம் இயற்றி

நச்சைமுன் உண்டஅப் பரனைமண மாலையிடு
நாரி, சிவை, பார்ப்பதி, உமை
நாரணி, கல்யாணி, திரிசூலி, கங்காளி, பரை
ஞாலங்கள் ஈன்று எடுத்த
பச்சைமயிலாம் கன்னி இச்சையுடன் உதவ வரும்
பால எனையாளும் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள் உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே. 7

## மலையாண்டி பதிகம்

பொய்திகழும் வார்த்தையோடு ஊர்க்கெலாம் ஏற்காத
புரட்டினைச் செய்ய எண்ணும்
போகாத இடமெலாம் போகவே எண்ணும் இப்
புவிஎலாம் ஆள எண்ணும்
மெய்திகழும் வார்த்தை சொல எண்ணிடும் சிலசமயம்
மேலான மோக்ஷ வீட்டை
வேண்டிடும் சிலசமயம் மேலவர்கள் உறவினை
விரும்பும்அயில் போலும் விழியில்

மைதிகழும் மாதர்புகழ் பேசிமகிழ் கொண்டிடும்
மறந்தவர் தமைப் பழிக்கும்
மதியைவிட்டு ஒருவழியில் நிற்கின்ற பரிசுத்த
மதியினைத் தந்து ஆளுவாய்
பைதிகழும் விடஅரவை அணிபரமன் உதவ வரு
பாலனே செல்வ அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள்உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே. 8

கால்ஒத்த வேகமொடு சென்றுலகம் எங்கும்
கலக்கமது செய் அசுரனைக்
கடவுள்சக் கரம்அதனி னாற்கொன்று வருதலைக்
கண்டுமால் அங்கவன் தன்
போல்ஒத்த உருவு எடுத் தன்னவன் தேவியைப்
புணரஅவள் கண்டு பூவில்
போய் ராமன் ஆகுஎன்று இறந்திடச் சுடலையிற்
போய் மாயவன் புரளவே

சேல்ஒத்த விழிஉமையள் கண்டுவிதை ஒன்றினைத்
திருத்துளவம் ஆவாய் எனச்
செப்பியே போடஅத் துளவமது அணிந்து மயல்
தீர்ந்ததிரு மாலின் மருகா
பால் ஒத்த மொழி கௌரி தரு பால என்மீது
பட்சம் வைத்தாளும் அழகா
பதியை நிகர் நவமணிகள் நிதிகள் உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே. 9

## மலையாண்டி பதிகம்

மதியுற்று நதியுற்று மணியுற்று விடமுற்ற
மாபணிகள் தாமும் உற்று
மலருற்று அவ்வழகுற்ற சடையுற்ற பரமற்கு
மைந்தனென வந்து உலகிலே
துதியுற்று வாழ்கின்ற தோன்றலே புலவோர்கள்
தொழுதிடக் கருணை செய்யுந்
துய்யனே கிரிமேவும் ஐயனே எற்கு அருள்செய்
சுகுணனே மணி முத்தமா

நதியுற்ற நாட்டினில் வளமிக்க நிலமுற்ற
நகராங்கள் தன்னில் என்றும்
நாடியறமே செய்யும் நகரம் என வானோரும்
ஞாலமிசை எய்த வளமாம்
பதியுற்ற தனவணிகர் குலம்ஒக்க வாழ்வுறப்
பட்சம் வைத்தாளும் அழகா
பதியைநிகர் நவமணிகள் நிதிகள் உறும் வலயமா
பதியில் வளர் மலையாண்டியே. 10

முற்றிற்று

உ

சிவமயம்

வேலும் மயிலும் துணை

# திருவாரூர் தியாகேசர் பதிகம்

## காப்பு

பூ உலகும் தேஉலகும் போற்று திருவாரூரின்
மேவும்தி யாகேசர் மீதுஇனிய - பா இயம்பக்
கூற்றைஉதைத் தோன்அடியர் கொண்டுவந்த பொன்னினது
மாற்றைஉரைத் தோய்அருள வா!

## நூல்

பொன் உலகின் வாழ்வர்க்கு இன்னல்செய்து ஒழுகலே
பூண்எனக் கொள்ளும் அசுர
பூபனைக் கொன்றுவரு முசுகுந்தன் உன்னை அரி
பூசனை செயக்கண்டு மா
மன்னனிடம் உன்றனைப் போலாறு தியாகரை
வாங்கி ஒரு நாளதனிலே
வான்மியூர் நள்ளாறு காராயல் ஒற்றியூர்
மாமறைக் காடு நாகை

என்னும் தலங்களில் வைத்தவன் வணங்கநாம்
இலை என்று அவ் ஏந்தலுக்கே
எழில் மிகும் செங்குவளை உண்டு என்று சொன்ன அவ்
இயல்பது தெரிந்து வாங்கிச்
செந்நெல்விளை ஆரூரில் வைத்தவன் வணங்க அருள்
செய்தேவ எனை ஆளுவாய்
செங்குவளை கொன்றைநதி திங்கள் அர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. 1

794

## தியாகேசர் பதிகம்

முருகோடு புழுகோடு பணியோடு பிரியாத
முலைமாதர் ஆசை என்னும்
மோகம்த விர்த்தவர் தமக்குநாம் முதன்மைஉறு
முத்தியை அளிப்பர் என்றே
ஒருகோடி மறைகள்உரை செய்திட்ட பரமனே
ஓர்இரவில் அன்ப னுக்கா
உனதுபத மலர்நோவ ஏகிஅப் பரவையின்
ஊடல்தீர்த் தவர் தமக்குப்

பொருளோடு பணியோடு முத்தியை அளித்திட்ட
போதனே கால காலா
புருகூதன் மாலயன் வேதங்கள் காணாத
புண்ணியா எற்குஅருள் செய்வாய்
தெருவீதி தனில் மாதர் எறிகளப மணம்நாறு
திருவாரூர் மேவு முதலே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள் புனை
செஞ்சடைத் தியா கேசனே 2

சிந்துகீர்த் தனைபதம் கவிபாடி ஆடிடும்
சிறுமியர்கள் வீடு சென்று
செப்பனைய முலைமாதர் செப்பிடும் வார்த்தையைச்
சென்னியில் கொண்டு நித்தம்
மந்தமதி கொண்டவர் கடந்தமயல் பூண்டு உற்ற
மாபாவி என்னினும் தான்
மாசற்ற பெரியோர்கள் ஏசுற்ற தன்மையால்
வந்துஉனை அடுக்கல் உற்றேன்

பந்தனைய கொங்கையொடு கொந்தளக பாரம்உறு
பாவையர்கள் ஆசை என்னும்
பாழான படுகுழியில் வீழாமல் என்றனைப்
பட்சம் வைத்தாளும் ஐயா
சிந்தைதனில் அன்போடும் உன்றனடி தொழும்அடியர்
திகழ்ஆரூர் மேவும் அரசே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே 3

## தியாகேசர் பதிகம்

பெருமாங்க லந்தன்னில் அடியார்கள் அடியினைப்
பேணியே வாழ்கின்ற நற்
பெற்றிஉறும் ஏயர்கோன் கலிக்காம நாயனார்
பிஞ்ஞகா விரவில் உன்னை
மருமங்க லம்புனை செய்திகேட்டு ஊடலுறும்
மனைவியிடம் ஏக வைத்த
வன்றொண்டனும் அடியன் நோவனோ எனமனம்
வைக்கஅச் செயல்தெரிந்து அங்கு

இருமங்கலம்செய்த ஆரூரன் எனும் வள்ளல்
ஏவவே சூலை நோயால்
இருவரையும் நண்புகொண்டு உறவைத்த மாசுஇலா
இன்பப் பெருக்கு அமுதமே
திருமங்க லங்கள்மிகு திருவாரூர் தனில்மேவு
தேவனே எனை ஆளுவாய்
செங்குவனை கொன்றைநதி திங்கள் அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே 4

எந்தையே இந்தஉல கம்தனைத் தந்தவனை
என்குறைகள் ஓத விலையோ
எடுத்துஎடுத்து இபமுகவன் என்துயரம் நின்னிடை
இயம்ப இலையோ நுதலினில்
வந்தமுரு கேசன்நான் நொந்திட்ட விதம் ஆறு
வாய்திறந்து ஓத இலையோ
வானவர்கள் அரிவைர வன்வீர பத்திரன்
மால்அயன் சொல்ல விலையோ

மைந்தன் நான் அல்லவோ தந்தைநீ அல்லையோ
வாளா இருப்ப தென்னோ
மைந்தனுக்கு அருள்செயாத் தந்தைஎன் றும்தனை
வானுலகம் ஏசி டாதோ
சிந்தைவைத் துன்றன்அருள் தந்தென்னை ஆளுவை
திருவாரூர் மேவும் அரசே
செங்குவளை கொன்றைநதி திங்கள அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனை 5

## தியாகேசர் பதிகம்

ஏகசக் கரமதனி னால்உலகம் ஆண்டுவரும்
இறைவன் மகன் ஓர்தி னத்தில்
இரதமிசை ஏறிவர அ(ன்)னையினைத் தேடி அங்கு
இச்சையொடு கன்று தானும்
வேகமொடும் வரவந்த இளவல் இரதம் கன்றின்
மேலேறி மாய ஆவும்
மிகநொந்தும் அசையாத மணியினை அசைக்க அவ்
வேந்துகேட்டு அச்சம் உற்றுச்

சோகமொடும் ஓடோடி வந்துபசு நின்றிடும்
துயரது தெரிந்து மகன்மேல்
சுற்றிவரு தேரோட்ட அன்றுஉயிர் கொடுத்து ஆண்ட
தூயனே என்னை ஆள்வாய்
தேகிகட்கு அருள்செயும் ராஜாதி ராஜனே
திருஆரூர் மேவும் முதலே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே 6

தருமம்கை விட்டுநற் குருமங்கை யைக்கூடு
சந்திரற்கு அருள்செய்து தன்
தலைதனிற் புனைபரம திரிபுரரை எரிசெய்த
சாமி வரை அரசன் மேனை
தருமங்கை தனைமணம் புரிஅங்கணா உலகு
தான் ஆண்ட சூர பதுமன்
தன்னோடும் அரிமுகன் வரையோடு தாருகன்
தமர்களோடு சமர்அத னிலே

பொரும்அங்கை வேல்கொண்டு விண்ணவரை ஆண்டதொரு
புதல்வனைப் பெற்ற முதலே
புத்தமுதம் ஒத்தமொழி உற்று உலகின் வித்தைஅருள்
பொற் கொடியினோடு நாளும்
திருமங்கை குடிஉற்ற திருஆரூர் தனில்மேவு
தேவனே எனை ஆளுவாய்
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள் புனை
செஞ்சடைத் தியா கேசனே 7

## தியாகேசர் பதிகம்

அரவிந்த மலர்மேவு கமலாலயம் தன்னில்
அன்போடு இறங்கி நித்தம்
ஆழமுள வெட்டிமணல் கல்எடுத்து இடுதொழிலில்
அமர்தண்டி அடிகளைக் கூஉய்ச்
சிரமமொடு 'பொட்டையா வெட்டாதே உயிர்களும்
சேதமுறும்' என்று சமணர்
செப்பஅவர் அருங்கண் நயனங்கள் கெட்டு என் கண்கள்
தெரியில்என் செய்வீ ரென

'விரைவினொடும் இந்நகரை விட்டு ஏகுவோம்' என
விளம்பும்அச் சமண ருக்கு
விழிகள் கெட் டிடவும்இவர் விழிகள்உற் றவர்தமை
விரட்ட அருள் செய்த முதலே
திரவியக் குவியல்மிகு திருவாரூர் தனில்மேவு
தேவஎற்கு அருள்செய் குவாய்
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே 8

நன்றுபுரி கின்றவர்கள் ஒன்றும்உறவு இன்று எனினும்
நன்றியே புரிவர் என்று
நாதனே வேதத்தில் ஓதிஇப் போதுஎனது
நாட்டம்அரு ளாத தென்னே
கன்றினுக்கு ஈன்றபசு நன்றிபுரி கின்றதைக்
காதினால் கேட்டது இலையோ
கடையனேன் என்மீது படைஎடுத்து ஒருநாறு
கணையை வேள்விட்ட தாலே

வென்றிடவும் அன்றிநான் கன்றிமனம் ஒன்றியே
மிகவாடி நொந்து அடைந்தேன்
வேதன்முன் தூதுஏவ ஓதவரு வேளைநுதல்
விழியால் எரித்த பரனே
சென்றிடச் சொல்லிவேள் கலகத்தை நீக்கி ஆள்
திருவாரூர் மேவும் அரசே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள் புனை
செஞ்சடைத் தியா கேசனே 9

## தியாகேசர் பதிகம்

நாராயணன் நிதம் பூசைபுரி சச்சிதா
னந்தநமி நந்தி அடிகள்
நாடோறும் உனதுசந் நிதிவிளக் கேற்றிவரு
நாள்தன்னில் ஓர் தினத்தில்
ஏராள மானநெய் வேண்டிஅறி யாதமணர்
இல் அடுத்து இங்கு பசுவின்
இழுதுறின் கொடும்அடிகள் ஆலயத் திருவிளக்கு
ஏற்றஎன அக்கொடி யவர்

தாராள மாகவே நாரம்விட் டேற்றும்உம்
சந்நிதித் தீபம் என்னச்
சலம் வார்த்தும் ஏற்றுவேன் பார்மின்என ஏற்றஅருள்
தான்புரிந்து தாளும் முதலே
தீராத பவமெலாக் தீர்க்கின்ற நாதனே
திருஆரூர் மேவும் அரசே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே 10

தரணியில் பிறந்துஇது வரைக்கும்நல் தானமொடு
தருமங்கள் செய்தும் அறியேன்
தலைமைஉறும் உனதுபுகழ் பேசிஅறி யேன்உனது
சந்நிதியில் வந்தும் அறியேன்
பரணி, மடல், கோவை அந்தாதி பிள்ளைத்தமிழ்
பாடிப் படிக்க அறியேன்
பாடுவார் தங்களொடு கூடஅறி யாமல்உறு
பாவியேன் எனினும் மூன்று

புரம்நீறு படமுனம் நகைசெய்த ஈச உன்
பொன்னடி வணங்கி நாளும்
புகழொடு வாழ்ராம சாமிதவம் அதனில்வரு
புதல்வன்நான் அலையல் தகுமோ
சிரம்நீறு அணிந்திட்ட தேவாதி தேவ அருள்
திரு அரூர் மேவும் அரசே
செங்குவளை கொன்றைநதி திங்கள் அரவங்கள் புனை
செஞ்சடைத் தியா கேசனே 11

முற்றிற்று

உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

ஒய்யக்கொண்டான் சிறுவயல்

# பொன்னழகி அம்மன் பதிகம்

## காப்பு

பொன்மருவும் சீர்வயலில் பொன்அழகி மேற்பதிகம்
சொ(ல்)ன்நயத்தில் சொல்ல வரும் தொல்லுலகில் - முன்னம்
அரிமுகனை வென்ற அறுமுகற்கு மூத்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்

## நூல்

மாமேவு நவரத்ன மாடமொடு கூடங்கள்
மன்னிவாழ் நேம நாட்டில்
வான்ஆறு போலவே தேன்ஆறு பாய்தலால்
வான் நா டெனச் சிறந்த
காமேவு சீர்வயலில் வணிகர்குலம் வளரஅருள்
கௌரி திரி சூலி வீரி
கங்காளி மாதங்கி தேவிமுக் கண்ணிஉன்
கழல்களைத் தேடும் வேதப்

பாமேவு நினது புகழ் சொல்லிவாழ் புலவரொடு
பரவி வாழ் மாதவர்க்கும்
பாரில் அருள் செய்பரா சக்தி இவ்வேளை இப்
பாலனேற்கு அருள்செய் அம்மா
பூமேவு குழல்மாதர் அங்கையொடு கொங்கையில்
பூசிஎறி களபம் நாறும்
பொன்உலகு இது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 1

## பொன்னழகி அம்மன் பதிகம்

அங்கைவடி வேல்இலகும் எங்கள்முரு கேசனோடு
ஆனைமுகன் ஆதி ஆய
அகிலங்கள் யாவையும் பெற்றுஅவை வளர்த்திடும்
அன்னைஎன உற்று இன்னமும்
கொங்கைகள் தாழாத மங்கை என்று உலகுஎலாம்
கொண்டாடு குமரி வாமி
கோதண்ட பாணியின் தங்கையே பாண்டியர்கள்
குலமது தழைத்து ஓங்கமா

நங்கையாய் வந்துவளர் அங்கயற் கண்ணியே
ஞானமழை பொழியு முகிலே
நாதனொடு போர்புரிந்தோர் கொங்கைமறைய உளம்
நாணி மதி கங்கையுடனே
பொங்கரவு ஆடிடும் சங்கரன் தனைமணம்
புரிசத்தி எற்குஅருள் செய்வாய்
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 2

மாமாது கொழுநனும் நாமாது கேள்வனும்
வான்நாடர் தம்இறை வனும்
வந்துஉனது பதமலரில் அனுதினம் வணங்கஉயர்
வரம்அருளும் முதல்வி நேமி
காமாதி கரணங்கள் வென்றகுறு முனிஅரன்
காதில் உபதேசித் திடும்
கந்தன்ஆம் மைந்தனைப் பெற்றிடும் கன்னியே
கருணைமழை பொழியு முகிலே

தூமாதி பஞ்சநவ கிரகம்எனை உலகினில்
துன்பப் படுத் தாமலே
தூயஅருள் செய்தென்னை ஆளுவாய் பரமனின்
துணைவி என வருசுந் தரி
பூமாது நிகரான மாமாதர் ஒருகோடி
பூம்பொழில் உலாவ லாலே
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 3

## பொன்னழகி அம்மன் பதிகம்

அன்னையே! நீமுனம் செய்திட்ட நாலெட்டும்
அறம்தன்னில் இன்னல் நோயை
அகற்றிடும் அறமொன்று செய்தையே! என்மட்டில்
அவைநீ செயாது இருத்தல்
என்னவோ? அறிகிலேன் ஏழைமீது உன்தனக்கு
எப்பொழுது கிருபை வருமோ?
இமயமலை உதவவரு பசியகிளி வடிவழகி
இன்னருள்செய்து ஆள்வை அம்மா

மன்னவர்கள் தொழுகின்ற தென்னவன் நாட்டினில்
மன்னுமா நகர் அதனிலே
மாடமொடு மாளிகைகள் கூடமொடு கோபுரம்
மாமதில்கள் மண்ட பத்தில்
பொன்னுநவ மணிகளும் வைத்து இழைத்து எங்கணும்
பொலிகின்ற சீரதனி னால்
பொன்உலகிது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 4

பத்தியொடு சீர்காழி தனில்நந்த வனமதைப்
பாகசா தனனும் வைத்துப்
பரிதிகிர ணங்களால் காய்ந்திடக் கண்டுஉளம்
பதைபதைத்து இபமு கவனை
நத்தியே மோதகம் மிக்குதேன் பாகுபால்
நற்கனி களோ டவற்கு
நல்கவே வேணதை நவில்க எனக் குறியமுனி
நாதனால் பெறு கங்கையை

இத்திசையில் வருகநீ செய்எனக் காகமாய்
ஏகிமுனி கலச மதனில்
ஏறிக் கவிழ்த்தபின் பொன்னிமா நதிஅதாய்
ஏகுஎனச் சொலி விட்டிடும்
புத்திரன் தனைஈன்ற சத்திமா தேவிஇப்
போதுஎன்னை ஆளும் அம்மா
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 5

## பொன்னழகி அம்மன் பதிகம்

மின்போலும் இடைஒடியும் ஒடியும்என்று என்றவரின்
மென்சிலம்பு ஒலிகள் ஆர்ப்ப
விம்மிப்புடைத்து இளகி அண்ணாந்த இருகொங்கை
மின்னார்கள் தன் ஆவலால்
என்போல் அலைந்தவர்கள் அறிவாளர் அறிவிலார்
இருவர்களில் ஒருவர் உண்டோ
என்செய்வது என்று அறியேன் அம்மம்ம என்கர்மம்
ஏதுஎன்று எடுத்து உரைப்பேன்

அன்போடு நின்னடியில் அடியற்ற மரமதுபோல்
அலறி விழும் அடியேனையும்
ஆதரித்து அவனியில் பிறிவிதந்து அலையாமல்
ஆண்டுஅருள வேண்டும் அம்மா
பொன்போலும் மேனிஉள பாலகும ரேசனைப்
புதல்வனாய்ப் பெற்ற அமுதே
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 6

அறிவரிய நினதுதிரு மலரடி நினைக்கின்ற
அறிஞர்களின் உறவு வேண்டும்
அகத்தொன்று வைத்துப் புறத்தொன்று பேசுகின்ற
றவர்உறவை நீக்க வேண்டும்
தெரிவுஅரிய நினதுபுகழ் செப்பவேண் டும் பொய்ம்மை
செப்பா திருக்க வேண்டும்
சினம்இலா நெறிபிடித்து ஒழுகவேண் டும்மதத்
தீப்பேய் உறாமை வேண்டும்

தெரிவையர்தம் ஆசையை மறக்குமதி வேண்டும்உன்
சேவைமற வாமை வேண்டும்
செப்பரிய நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
செல்வமொடு வாழ்வு வேண்டும்
பொருவரிய கயமுகா சூரனைக் கொன்றிடும்
புதல்வனைப் பெற்ற குயிலே
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 7

## பொன்னழகி அம்மன் பதிகம்

இதழோடு நுதலாட எழிலான முகமாட
இபமுகத்து ஐயன் ஆட
இந்திரன் சசியோடு வானோர்கள் தாம்ஆட
எந்தைமுரு கேசன் ஆட
மதனோடு ரதியாட மாலோடு நூலாட
மறைதந்த பிரமன் ஆட
மானோடு மழுவாட விடையோடு கணமாட
மாமாது வாணி ஆடப்

பதமோடு மலராட அட்டபா லகராடப்
பாடிடும் பெண்கள் ஆடப்
பரிதிமதி சேயாட குருவோடு குருஆட
பணிகளொடு மந்தன் ஆட
புதன்ஆட வினையோட எனைநாடி விருதோடு
புவியில்நட மாடிவரு வாய்
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 8

மாமாமா மாஎனக் கரிமுகன் அழைப்பவனை
மதம் மிகும் கரியும் அன்று
வாவாவா வாஎனக் கூவிஅங்கு அழைக்கவே
வந்துஅதற்கு அருள்செய் திடும்
வாமாவ தாரனாம் மாயவன் சோதரி
வானில்அரி உதிக்கும் முன்னம்
வாயினால் கூகூகூகூ எனக் கூவிடும்
மாசேவ லந்துவச னாம்

கோமானை எற்கு அருள்செய் சீமானை ஈன்றிடும்
குமரி கருணாநிதி யமே
கொடிதான வினையினைப் போபோபோ போஎனக்
கூறிலது ஒளிந் திடாதோ
போமாறு செய்தென்னை ஆளுவாய் மேனையின்
புதல்வியாய் வந்த மயிலே
பொன்உலகு இது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 9

## பொன்னழகி அம்மன் பதிகம்

வேதாக மங்கள் இதி காசமும் புராணமும்
விரும்பியே கற்றும் அறியேன்
மேலவரை நாடிஉற வாடி அறியேன் புவியின்
மீதுஅறம் செய்தும் அறியேன்
மாதாபிதாவோடும் உனது அடியார் தங்களின்
மலர்ப்பதம் வணங்கி அறியேன்
மடவார்கள் உறவாடி உனை மன(த்)தில் நினையாத
மாபாவி என்னினும் தான்

தாதாவின் முதன்மைஉறு தாதாநீ ஆகையால்
ஆதரவுன் அருளை என்னத்
தான்ஆடி வந்தனன் தாய்தனைச் சேர்ந்திடும்
தனயனையும் ஆள விலையோ
பூதாதி கணநாதர் தொழுகின்ற சத்திஇப்
போது என்னைஆள்வை அம்மா
பொன்உலகுஇது என்னவளம் மன்னுசிறு வயலில்வளர்
பொன்அழகி அம்மை உமையே 10

முற்றிற்று



உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

காரைக்குடி

# கொப்புடை அம்மன் பதிகம்

## காப்பு

வடிவு உடையாள், கொப்புடையாள், மா மேவும் காரைக்
குடி உடையாள் மேற் பதிகம் கூற, - படி அனைத்தும்
தந்தனையே தந்தருளும் தந்திமுக! உன் இரு ப -
தந்தனையே தந்து, அருளும் தா

## நூல்

சீர் கொண்ட சுவண மலி உவணை நகர் அரசு புரி
திறம் மருவும் அரி முதல ஆம்
தேவர் முப்பத்து முக் கோடியும், கிம்புருடர்,
சித்தர், சாரணர், முதலியோர்
ஏர் கொண்ட மது ஒழுகு கமல மலர் என எழில் கொள்
இணையடிகள் பரவ அவிரும்
ஏகாந்த வல்லியே! பாகு ஆர்ந்த சொல்லியே!
இன்பப் பெருக்கு அமுதமே!

கார் கொண்ட வண்ணன் ஆம் கண்ணன் மகிழ் தங்கையே!
கருணை மழை பொழியும் முகிலே!
கங்கை நதி புங்க மதி தங்கு சடை அம் கணன்
காமாரி பங்கின் மணியே!
தேர் கொண்ட தெரு மருவு திகழ் பவனிவரு பெரிய
செல்வியே! என்னை ஆள்வாய்;
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 1

## கொப்புடை அம்மன் பதிகம்

சாங்கரி! பராசக்தி! கௌமாரி! மாதங்கி!
சச்சி தானந்த ரூபி!
சர்வ பரிபூரணி! பவானி! சிவை! வாராகி!
சாம்பவி! பரஞ் சோதியே!
புங்கவி! நினைந்தவர் வரம் தரு சுதந்தரி!
புரந்தரா தியர்கள் போற்ற
பொற்பு மிகு விற் பரவு பொற் சிகரி விற் பொலிசெய்
பொற் கை அரனுக்கு ஓர் இடம் ஆர்

பங்கு உறைசெய் மங்கை வளர் செங் கைமிசை கங்கை நதி
பரவு நிறை கருணை வடிவே!
பரவும் அடியவர்கள் மன இருள் அகல வளர் ஒளிசெய்
பானு ஆம் ஞான மணியே!
திங்கள் அணி செஞ் சடை விளங்கும் அகளங்கி! மிகு
சிறியனேற்கு அருள்செய் அம்மா!
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 2

பூரணி! புராதனி! கராசலம் நிராசையொடு
போர்த்திறம் மறந்து. வாடிப்.
பொற்புறு மடுக்கண் மிக எய்த்து. முதலைப் பெரிய
பொறி வாயின் நின்று வெருவி
'ஆரணத்து உறை ஆதிமூலமே! சோதியே!
அதிக கருணைப் பெருக்கே!
அண்ணலே!' என அழைத்திட வந்து காத்தருள்செய்
அரி சகோதரி! பெருமை ஆர்

தாரணி புரந்த ஜெய வீரனாம் பாண்டியன்
தவம்அதனில் வந்து உதித்த
தனையை! அனை! அனவரதம் உனது மலர் அடி பரவு
தனையன் எனை ஆள்வை : அம்மா!
தேர் அணியுடன் தெருவினில் பவனிவருகின்ற
தெள் அமுதமே! சிறந்த
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 3

## கொப்புடை அம்மன் பதிகம்

மரு மேவு மலர் மேவு திருமாது, கலைமாது,
வந்து இரு புறத்தும் நின்று,
வளர் ஒளிசெய் கவரி நிரை அசையவிட, அருள்புரியும்
வனிதை! அதி சுமுக வதனி!
உரு மேவு தரு மேவி, ஒளி மேவு வசு ஆகி,
உற்ற நாட்டரசன் முதல் ஆம்
உம்பர்கள் வணங்கு பத நங்கையே! அடியவர்க்கு
ஒய்வு இன்றி உழலு நோய் ஆம்

கரு மேவு ஜனபதம் அடைத்து, நிறைதரு பெரிய
கருணை மழை பொழியும் முகிலே!
கந்துகத்தொடு, மருவு சந்தனத்திடை, அடியர்
கண் கழித்திட, வளம் சேர்
தெரு மேவி வரு தாய்! உனது பாத மலர்மீது
சிந்தையுற எற்கு அருள் செய்வாய்!
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 4

கங்காளி! திரிசூலி! அம்பிகை! பராசக்தி!
கௌமாரி! காத்யா யனியே!
கஞ்சலோசனி! கௌரி! வஞ்சமாம் மனமுடையர்
காணரிய ஞான வடிவே!
பொங்கு ஆழியிடை வந்த விடம் உண்ட கண்டனைப்
போற்றினை, உளத்து வைத்து;
பொன்முடி கவித்து நவ மணி குலவு மணிகளால்
பொற்புறச் செய்து நிதமும்,

மங்காத செல்வப் பெருக்கினொடும் அரசு செய
வைத்த, மதி வதன நிதியே!
'மதிஇல் அதி மடையன்' எனும் அடியன் என உனது மனம்
வைத்து எனை ஆளும் அம்மா!
செங்காவி பொங்கு ஆவி மங்கா அகன் காவு
சிங்காது சூழ்ந்து எழில் செய்,
திருமாது குடியாக வளர்காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 5

முத்தணி கொள் மத்தகமது ஒத்திடு தனத்தியர்கள்
முக மதியிலே, நுதலிலே,
முளரி மலர் என எழில்செய் இரு விழியின் வழி ஒழுகு
முதிய அபிநய மதனிலே,
நத்து அன கழுத்தினிடை, நடை நொடியிலுடை இடையின்
நாடி மிக வாடிடாது,
'நதி, அரவு, மதி, மருவு சடையுடைய பரமன் இடம்
நண்ணிவளர் பெண்ணமுது' எனும்

முத்திவித்து ஆம் உனது பத்தர் மனம் மகிழ்வி னொடு
முதன்மை பெறு கூட்டமதிலே
முருகு விரி கமல மலர் எனும் உனது திருவடியில்,
முசு எனத் திரியும் என்தன்
சித்தம் நிலறயாகவே வைத்திடக் கருணைபுரி
செல்வி! பல வளம் நிறைந்து
திருமாது குடியாக வளர் காரை நகர் வேவு
தேவி கொப்புடை அம்மையே! 6

வேல் எடுத்து அடு, கொடிய ஆலம் ஒத்திடும், அரசு
வேலை அட்டு எழு பரவை சூழ்
மேதினிக்கு அரிய துயர் தீர்தரப் புரிகுழகன்
வேதனுக்கு அருள்செய் குகனாம்
கோலம் முற்றிடு மயிலின் ஏறி எற்கு அருளவரு
கோமளப் புதல்வன் அனையே!
கோசலைக்கு அருமை மகன் ஆனவற்கு இளையை! உமை!
கூடலுக்கு அரசி! பரை! 'மா

ஞாலம் முற்றிலும் உதவு தாய்' எனப் புலவர் பணி
நாரி! முக் கணிய மலையே!
நாடி நித்தமும் உனது தாள்களைப் பரவிவரு
நாயகருக்கு அருள்செய் திருவே!
சீலம் எப்பொழுதும் அறியாத சொல் பகரும் மதி
சேரும் இச்சிறியன் எனை ஆள்,
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 7

கொப்புடை அம்மன் பதிகம்

மலை ஒத்த புயம் உற்ற மத அத்தி வதனத்தன்
மா கயன் எவ் ஆயுதத்தும்
மடியாத செயல் கண்டு, பரமன் அருள் வரம் என
மதித்து, அரனை உன்னி மன்னும்
கலை ஒன்றுடன் இரண்டு பிறை என்று மிளிர்கின்ற
கவின்வலக் கொம்பு ஒடித்துக்
கைக்கொண்டு, விட்டு, உடல் படியிடைப் பொடித்து அடல் செய்
கடவுள், உலகங்கள் காத்த

நிலையுறு மணிப் புயன், புலவர்கள் துதிக்க மிகு
நேயம் வைத்து ஆண்டபெருமான்,
நித்தியானந்தன் ஆம் ஏரம்பனைப் பெற்ற
நிமலி! பரை! சிவை! அமலையே!
சிலைதனைச் சிலை எனக் கொண்ட பரமன் இடம் மருவு
செல்வியே! சிறியன் எனை ஆள்.
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 8

மங்கையர்கள் கொங்கையிடை இங்கிதம் முயங்கி மிக
வருகின்ற பெருநோய் களுடன்
மட்டிலாத் துயரில் அடிபட்டு, அதனிலே மனம்
வருந்தி வருகின்ற பிணியும்,
மங்கு மன வஞ்சகர்கள் நெஞ்சில் நினைந்து செய
வரு பில்லி, சூனியம், மா
வனம் மருவிவரு விலங்காதிகளினால் என்றும்
வரு பயம், பிற அனைத்தும்,

புங்கமுறும் உனது அடியார் அடையாது காத்திடும்
பூரணி! புராதனி! சிவை!
புனிதர் அக மகிழவரு கருணை பொழி அமுதமே!
புண்ணியம் வளர்த்த திருவே!
சிங்க வாகனம் ஏறு செல்வி! என் பவம் எலாம்
தீர்த்து, ஆண்டு, கருணை புரிவாய்;
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 9

**கொப்புடை அம்மன் பதிகம்**

மகமாயி! 'செக மாயை புக மூழ்கி மிக மாழ்கு
மனிதர் உனது அடியின் நேயம்
வதியும் மனம் உடையர் ஏனின் அவர்கள் கடவுளர் கணித
மருவு பதம் உறுவர்' எனவே
மிகுவாய மறை கூறும் எனில், நினது மகிமைதனை
விரிய உரை தருவர் எவரே?
விஜயம் மிக திரிபுரரை அரை நொடியில் படுபொடிசெய்
விமல நகையுடையவன் இடம் ஆர்

தகை மேவு நிதியமே! தந்திமுகத்து ஐந்துகரத்
தனையன் மகிழ் இனிய அனையே!
தன தன் என நனி கனகம் மிக உறினும் உனது அடிச்
சார்வு இலார் பெருமை இலரே;
திகழ்கார வரை ராசன் மகள் ஆன சிவகாமி!
சிறியேனை ஆள்வை அம்மா!
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 10

தாயார் வயிற்றில் பிறந்து, புவிமீது யான்
தன்மம்அது செய்தும் அறியேன்;
'தஞ்சம்' என வந்தவரை 'அஞ்சவேண்டாம்' என்று
சாற்றும் வகை தானும் அறியேன்;
ஆயாசமாய் வரும் அடியார்களுக்கு அன்னம்
அன்புடன் அளித்தும் அறியேன்;
அந்தணர்கள், பெரியோர்கள், தாய், தந்தை, குரு தெய்வம்
அடிதனை வணங்கி அறியேன்;

ஓயாமல் மாதரின் மயல்கொண்டு நிதநிதமும்
ஓடித் திரிந்து அலைகுவேன்;
உன்னை நினையாமல் உறு பாவியேன் என்னினும்
உனைப் பணியும் இராமசாமிச்
சேய் ஆனதால், என்னை அலைய விடல் நீதியோ?
சித்தம்வைத்து ஆள்வை அம்மா!
திருமாது குடியாக வளர் காரை நகர் மேவு
தேவி கொப்புடை அம்மையே! 11

முற்றிற்று

உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

## காரைக்குடி

# கொப்புடை அம்மன் வருகைப் பதிகம்

### காப்பு

ஞாலம் புகழ் காரை நல் நகரில் கொப்புடையாள்
மேல் அம் பதிகம் அதை விளம்ப – சீலம் மிகு
கொந்தளகபாரக் குமரி தரு தந்திமுக!
வந்து உன் அருள் தந்து ஆளுவாய்.

### நூல்

பொன்னே! வருக; அமரர் தொழும் பூவே! வருக; பூ ஈன்ற
அன்னே! வருக; அறம் வளர்த்த அணங்கே! வருக; அருள் அளிக்க
இன்னே வருக; இமயமலை ஈன்றாள்! வருக; எழிற் காரை
மன்னே! வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 1

திருவே! வருக; நாரணி ஆம் தேவி! வருக; சிறந்த மலர்த்
தருவே! வருக; மகிஷனை முன் தகித்தாள் வருக; தமியேனின்
குருவே! வருக; நற்காரைக் குடியாள்! வருக; குணம் மணக்கும்
மருவே! வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 2

தேனே! வருக; காரைநகர்த் தேவே! வருக; சிறந்த மலர்க்
கானே! வருக; இனித்த சுவைக் கரும்பே! வருக; கருணை செயத்
தானே வருக; சண்முகற்குத் தாயே! வருக; தக்கன் அருள்
மானே! வருக ; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 3

குயிலே! வருக; கோணம் கைக் கொண்டாள்! வருக; கொள் கருணைப்
புயலே! வருக; பட்டாடை புனைந்தாள்! வருக; அழகுக்கு ஓ -
வியமே! வருக; வாணி தொழும் வித்தே! வருக வியன் காரை
மயிலே! வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 4

### கொப்புடை அம்மன் வருகைப் பதிகம்

நங்கை! வருக; வலைஞர் குல நாரி! வருக; நலம் அருள
இங்கு வருக ; இப முகனை ஈன்றாள்! வருக; எழில் மாயன்
தங்கை! வருக; காரை நகர் சத்தி! வருக; மேனை தரும்
மாங்கை! வருக! கொப்புடைய மாதா! வருக, வருகவே 5

அணங்கே! வருக; எனக்கு அருளும் அமலை! வருக; முப்புரத்தைத்
தணந்தாய்! வருக; அரி நடத்தும் சமர்த்தி! வருக; சார் மூன்று
குணத்தாய்! வருக; மா காரைக் குடியாள்! வருக; பரம்பொருளை
மணந்தாய்! வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 6

துதிக்க வருக; பத்தர் தனைச் சூழ வருக; மூதறிவைப்
பதிக்க வருக; புத்தமுதப் பாகே! வருக; ஊழ் வினையை
சதிக்க வருக; கைக் களிற்றின் தாயே! வருக; காரை நகர்
மதிக்க வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 7

பணியே! வருக ; எனது கண்ணால் பார்க்க வருக; பதத்தின் மலர்
அணிய வருக; எங்கள் குலத்து அரசி! வருக; எனது பவம்
தணிய வருக; காரை நகர்ச் சத்தி! வருக; ஒளி திகழும்
மணியே! வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 8

அடுத்து வருக; எனைப் புரக்கும் அம்மே! வருக; கயற்கொடியும்
பிடித்து வருக; விந்தை தொழும் பிடியே! வருக; அரிமீது
நடித்து வருக; வாழ் காரை நகராள்! வருக; மறை மொழித்தேன்
வடித்து வருக; கொப்புடைய மாதா ! வருக, வருகவே. 9

தருக வருக, அருள் அதனை; தாயே! வருக; எனது வினைக்கு
உருக வருக; காரை நகர் உடையாள் வருக; எற்குநிதி
பெருக வருக; வழுதி தரும் பிடியே! வருக; இப்பொழுதே
வருக, வருக; கொப்புடைய மாதா! வருக, வருகவே. 10

முற்றிற்று

உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

காரைக்குடி

# மீனாட்சி அம்மன் பதிகம்

## காப்பு

சீர்மருவும் காரைநகர்ச் செல்வி மீனாளும்
நேர்மருவும் என்பாவுக்கு இன்புஅருளும் - கூர்மருவும்
இந்துமுகத் தந்திவணத்து எந்தைதனைத் தந்தை எனும்
தந்திமுகத்து ஐந்துகரன் தாள்.

## நூல்

சீர்மேவு கமலமலர் மேல்அயன் மாலும்உன்
திருப்பாதம் வணங்கி நிற்க
சித்தர்வித் தியாதரர்கள் தேவர்முத லானபேர்
ஜெயவிஜய என்று போற்ற
வார்மேவு கொங்கைஅம் பூமாது நாமாது
மாகவரி வீசி நிற்க
மயிலவன் கஜமுகன் வந்துமடி மீதேற
மறையவர் ப(ல்)லாண்டு கூற

பார்மேவு நினதுபுகழ் சொல்லியே அரம்பையர்கள்
பண்உடன் நடனம் ஆட
பக்தியொடு குடைதனைக் கணநாதர் பற்றவே
பல்லியம் கடலின் ஆர்க்க
தார்மேவு தோரணத் தெருவீதி பவனிவரு
சாம்பவி இ(வ்)வேளை அருள்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 1

## மீனாட்சி அம்மன் பதிகம்

விலைவாங்கி அணைகின்ற வஞ்சமட மாதர்வாய்
வெட்டிலே பொட்டிலே வெவ்
வேல்ஒத்த விழியிலே பால்ஒத்த மொழியிலே
மின் இடையிலே நடையிலே
மலைஅதனை ஒத்தசீர் முலையிலே கலையிலே
மதிவதன ஒளிதன் னிலே
மஞ்சளின் பூச்சிலே அங்கையின் வீச்சிலே
மலர் அடியிலே பொடியிலே

சிலைஅதனை ஒத்திடும் நுதலிலே இதழிலே
சிந்தைதனை நுழைய விட்டு
திரிந்துநான் அலையாமல் அறிவிலே பொறையிலே
திரு அடியர் கூட்டத்திலே
தலைமைபெறும் அன்பிலே உனதுதிரு வடியிலே
தமியன் அகம் உறவை அம்மா
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 2

மலர்மேவு கலைவாணி மனமூடு தொழநாடி
வரநாளும் அருள் தேவியே
வனமேவு சனக ஆதி முனிவோர்கள் உனைநாடி
மகமாயி சிவை நாரிமா
சிலைராசன் மகளான உமைநேமி அபிராமி
சிவகாமி அருள்வாய் எனாத்
திகழ்பாத மலர்மீது விழுகாலை அருள்வாலை
திரிசூலி பரை வாமி நீ

மலைபோல முலைமேவு விலைமாதர் தமதுஆசை
மயலூடு சுழல்கால் எனா
மனம் வாடி உழல்வேனை அருள்போத இதுவேளை
வரவேணும் இவண் நாடியே
தலைமீது நதியோடு மதிசூடு சிவனோடு
சமராடி வரு நீலியே
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 3

## மீனாட்சி அம்மன் பதிகம்

சென்னி ஈரைந்துடைய ராவணன் மாதவம்
செய்துமுக் கணன் இடத்தில்
சென்றுசிவ லிங்கமதை வாங்கிவரு வழியினில்
தேவர் கோன் ஏவலாலே
அன்னவன் காணஓர் அந்தணச் சிறுவனாய்
அருகில் வர நிருதர்கோனும்
ஐயனும் பார்தனில் வையாமல் இருஎன
அளித்தவன் வருகு முன்னம்

மன்னவா, என்று கூய்ப் பூமிமிசை தாபிக்க
வந்தவன் குட்டுதல் செய
வானமுக டுறநிமிர்ந் தன்றுமுதல் அவைபெறும்
மதகஜ முகத்து வள்ளல்
தன்னைஅருள் பச்சைப்ப சுங்கிள்ளை அபிராமி
தருணம்இது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 4

சிங்கமுகன் முதலான அசுரருக்கு அஞ்சியே
திருமாது கேள்வன் அயனும்
தேவர்இந் திரனொடு கையிலையங் கிரியினில்
சென்றுஅரன் தன்னை ஏத்தி
இங்கு இவர்கள் செய்துன்பம் மாற்றிஅருள் வாய்என்ன
எந்தை அறுமுகனை நோக்கி
ஏகுஎன்ன முருகவேள் தாருகா சூரனொடு
இருபிளப்பு ஆக வரையை

அங்கைவடி வேலால் பிளந்துபின் வாகுவாம்
அறிஞனைத் தூதுவிட்டு அங்கு
அரிமுகன் சூரனைக் கொன்றுமக பதிதனக்கு
அன்றுமுடி சூட்டி வந்த
தங்கவடி வேலனைப் பெற்ற சாமளை குமரி
தருணம்இது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 5

## மீனாட்சி அம்மன் பதிகம்

அங்கப் பெருங்கப்பல் ஏறிப்பி றப்பென்னும்
அலைகடலில் ஒரு நாளில்
அம்மையே கர்மவினை ஆம் சுழல் காற்றினால்
அறிவுளனும் திசைகள் தப்பித்
தாங்காது துயராம் கருங்கடல் பாய்ந்துமெய்
சாரு(ம்) பிணி என்னும் அலைகளை
தாக்கவே உடைவேளை உயிர்என்னும் மாலுமி
தான்அங்கு நீங்குதல் செய

அங்குவந்து ஏமன்ஆம் சுறவுஉண்ண கோரத்தை
யாதுஎன்று எடுத்து உரைப்பேன்
அடியேனும் இவ்வண்ணமாய் இன்னமும் உலகத்தில்
அலையாது காத்து அருளுவாய்
சங்கு சக்கரம் தண்டு வாள்சிலை கொண்டமால்
தங்கை யாமளை அமலையே
தருமேவு சுரர்நாடு நீகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 6

நாயினேன் உறுதுயரம் இவ்வளவு எனப்பகர
நாஒன்று போதாது மேல்
நாடிவந்து என்குறை அகற்றுவார் நீஅலால்
நானிலத்து ஒருவர் இல்லை
பேய்அனைய பித்தனாய்த் திரிந்துஅலைந் தாலும்அப்
பிள்ளைதனை உலகு அதனிலே
பிரியமாய்ப் பெற்றிடும் தாய்தள்ளி விட்டிடல்
பின் எங்கு செல்லும் அம்மா

நீ ஏதும் அறி யாது போல்இருப் பதுவும் ஒரு
நீதியோ தயவு இல்லையோ
நெஞ்சத்துள் நினைவையேல் என்னகத்து உறுதுன்பம்
நீக்குவது உனக்கு அருமையோ
தாயே நின் ஆதரவை நம்பினேன் அருள்புரிவை
சமயம்இது சமயம் அம்மா
தருமேவு சுரர்நாடு நீகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 7

## மீனாட்சி அம்மன் பதிகம்

கருவம்மிகு கடல்தனை வேல்விட்டு அடக்கியும்
    ககனவழி யாக ஏகி
கடவுளர்க்கு இறையுடன் இருக்க அவனால் இடும்
    கனகமணி ஆரம் ஏற்றும்
பருவமுகி லைத்தளைகள் இட்டுவரும் அரியின்முடி
    பரு வளையினால் எறிந்தும்
பரிவுடன் பின்னவன் வேண்டிடக் காரதைப்
    பண்புடன் தலைகள் நீக்கித்

திருநகரின் மழைஒழுக வளமிகுதி கண்டுமுயல்
    திரவியக் குவியல் வேண்டிச்
சிலைதனைச் செண்டாற்பு டைத்துநிதி கொண்டும்வளர்
    செல்வனைப் பெற்று எடுத்த
சருவபரி பூரணச் சச்சிதானந்தியே
    தருணம்இது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
    சத்தி மீனாட்சி உமையே 8

கருணைக்கு வித்தாய் இருப்பதும் துயரைக்
    களைந்து இனிக் குறைவ ராமல்
காத்து அன்பர்தமை இரட்சிப்பதும் பொய்அல்ல
    கருதும்நின் இயல்வுக் குணம்
வருணக்க லாபமயில் வடிவுற்ற வல்லிஎன்
    வறுமைபிணி துயரம் யாவும்
மாற்றியே அருள்புரிந்து ஆள்என்ன நித்தமும்
    வருந்திநின் பால் உரைத் தும்

இருள்நீக்கி ஒளிதரும் இரவியைப் போலநீ
    எனக்குஅருள் செயாது இருத்தல்
என்பொ(ல்)லாக் கன்மமோ அலதுகலி காலத்தின்
    ஏற்றமோ அடிமை அலவோ
தருணத்தில் உதவிசெய் யாததும் தகுதியோ
    தமியனேற்கு அருள்செய் அம்மா
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
    சத்தி மீனாட்சி உமையே 9

## மீனாட்சி அம்மன் பதிகம்

பூமிதனி லேபிறந்து இதுவரையும் நற்செயல்கள்
புந்தியினில் நினைந்தும் அறியேன்
பூசைசெயும் உனதடியர் தங்களுக்கு அன்புடன்
போசனம் அளித்தும் அறியேன்
வாமிநிலை பேசுகலை ஓதி அறியேன் சுருதி
வாசகம் கேட்டும் அறியேன்
மறையோர்கள் முதியோர்கள் குரவோர்க அ(ன்)னை தந்தை
மலரடி வணங்கி அறியேன்

மாமி(ன்)னார் மயல்எனனும் வலைதனில் சிக்கியே
மதிகெட்டு அலைந்தேன் உனை
வணங்காத பாவியேன் என்னினும் நிதம்உன்னை
வாழ்த்தித் துதிக்கும் ராம
சாமிதரு புதல்வன்எனை அலையவிடல் தகுதியோ
தருணம்இது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி உமையே 10

முற்றிற்று.



உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

# பீந்தசா குமரகுருபரன் பதிகம்

## காப்பு விருத்தம்

சீரோங்க மேருதனை வளைத்தபிரான் திருக்கோயில்
பணிசெய் முல்லைத்
தாரோங்கும் தனவணிகர் குலம்வளர இருநிதியம்
தழைத்து அன்னோர்தம்
பேரோங்க அருள்புரியும் பீந்தசாக் குகன்பதிகம்
பேசு தற்குப்
பாரோங்க அறம்வளர்த்த பாவைதரும் கணபதியைப்
பணிதல் செய்வாம்.

## நூல்

திருமால்மருகா முருகோனே தெய்வயானை மகிழ்வோனே
பெருமா நிலத்தில் வந்துஇன்னம் பிறவாது அருள்வாய் நஞ்சுண்ட
பெருமான் தோழன் நகர்என்னப் பிறங்கும் பீந்தசாதனிலே
அருமாதவர்கள் தொழுதேத்த அமரும்குமர குருபரனே 1

வடிவேல் அணிந்த தணிமார்பா வள்ளிக்கு உகந்த மணவாளா
கொடியோன்ஆன எமன்பாவி கொடியதூதர் எனைவந்து
பிடியாதிருக்க வரம்தருவாய் பேசும்பீந்த சாதனிலே
அடியார்கூட்டம் மிகுந்து ஓங்க அமரும்குமர குருபரனே 2

வல்லார்வல்ல கலைஞருக்கும் மறைநூலவர்க்கும் வானவர்க்கும்
அல்லல்நீக்கி ஆண்டவனே அடியேன் வறுமை தவிர்த்தருள்வாய்
செல்லார் பொழில்கள் சூழ்ந்தெங்கும் சிறக்கும் பீந்தசாதனிலே
அல்லும்பகலும் வணிகர்தொழ அமரும்குமர குருபரனே 3

கண்டம் தன்னில் நஞ்சடக்கிக் கடவுள் காக்க அமுதம்அதை
உண்ட தேவர்க்கு அருள்புரியும் உமையாள் மகனே கருணை செய்வாய்
கொண்டல்படிய வளம்மிகவே குலவும் பீந்தசாதனிலே
அண்டர்வந்து தொழுது ஏத்த அமரும்குமர குருபரனே 4

## குமரகுருபரன் பதிகம்

திறம்சேர் சூரபதுமனுடன் சிங்கமுகனைத் தாருகனை
உரம்சேர் மலையாய் உற்ற கிரவுஞ்சம் தன்னை அட்ட அயில்
கரம்சேர் குகனே அருள் புரிவாய் கவின்கொள் பீந்தசாதனிலே
அறம்சேர் வணிகர்க்கு அருள்புரிய அமரும்குமர குருபரனே 5

தானாய்நாறும் கருங்குழலாள் சாமளை உமையாள் தருபாலா
மானார்மயலில் சிக்கிநிதம் வருந்தாது எனக்கே அருள்புரிவாய்
வான்நாடு உற்ற தேவர்எல்லாம் மதிக்கும் பீந்தசாதனிலே
ஆனாச்செல்வம் வணிகர்உற அமரும்குமர குருபரனே 6

ஒருமான் தன்னைக் கரம்வைத்தே ஒருமான் தன்னைச் சிரம் வைத்த
பெருமான்பெற்ற முருகோனே பிறவிவினையைத் தவிர்த்து அருள்வாய்
திருமால் மனைவி குடிமேவிச் சிறக்கும் பீந்தசாதனிலே
அருமாமறையோர் தொழுதேத்த அமரும்குமர குருபரனே 7

வட்டம் இட்ட குவிமுலையாள் வள்ளிமகிழும் வடிவேலா
பட்டபாடு போதும் உன்றன் பதத்தைத் தந்தே அருள் புரிவாய்
இட்டமுடனே உனது அடியார் இலங்கும் பீந்தசாதனிலே
அட்டத்திக்குப் பாலர் தொழ அமரும்குமர குருபரனே 8

புரத்தை சிரித்தே எரித்தவனின் புதல்வா
பரத்தை மார்கள் வலைதனிலே பட்டு வருந்தாது என்றனுக்கே
வரத்தைத் தந்தே அருள்புரிவாய் வழுத்தும் பீந்தசாதனிலே
அறத்தைப் புரியும் வணிகர் தொழு அமரும்குமர குருபரனே 9

அமராபதியில் அன்றுமுடி அரிக்குச் சூட்டி அவன் மகனை
அமரபதியில் மணம் செய்த அரசே வறுமை தவிர்த்தருள்வாய்
அமராபதியே நிகராக அறையும் பீந்த சாதனிலே
அமராபதியோர் தொழுதுஏத்த அமரும் குமரகுருபரனே 10

அரியின் புதல்வன் கவசம்அதை அரிஏவலினால் வாங்கிவந்த
அரியின் மருகா உனை நானும் அறியும்படியே அருள்புரிவாய்
அரியின் மகனார் திருத்தேவி அமரும் பீந்தசாதனிலே
அரியும் அயனும் தொழுது ஏத்த அமரும்குமர குருபரனே 11

முற்றிற்று.

உ
சிவமயம்
வேலும் மயிலும் துணை

# திருச்செந்தில் திருப்புகழ்

தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன - தனதானா

நிலவளம் ஒன்றிக் கயத்துள் நீரது
நிரைதரு செந்தில் பதிக்கு நாயக
நிசிசார் வஞ்சத்து உடற்று மாயையின் - வலியோடே

நெடியவில் கொண்டுஅக் களத்திலே அவர்
உயிரையும் உண்டக் குலத்தை வேரோடு
நிலம்வரை கிண்டிக் கெடுத்த மாயவன் - மருகோனே

கலைமகள் கஞ்சத்து இருக்கு மாதொடு
நிதம்மனம் ஒன்றித் துதிக்க நாடிய
கருமமும் முந்திக் கொடுத்த நாயகி - அருளோடே

கடுமுனம் உண்டிட் டவற்கும் நாயகி
பகவதி சிங்கத்து இருக்கும் மாதரி
ககனமும் இந்தப் புவிக்கு ளாரையும் - அருள்மாதா

மலைமகள் அஞ்சக் கரத்தி பூரணி
சயமகள் மொய்ம்பு எட்டு இருக்குநாரணி
மதுபதி அஞ்சக் கரத்தி யாமளை - தருபாலா

மலைநிகர் கொங்கைக் குடத்திலே அவர்
சொ(ல்)னு மொழிஇன்பப் பசப்பி லேநிரை
மதிமுக மங்கைப் பிலுக்கி லேஉறு - மயலாலே

அலைவுறு வஞ்சச் சமத்தனாய் மதி
இலைஎனும் என்னைப் புரக்க நீமயில்
அதுதனில் அந்திக் கணத்திலே அருள் - தருவாயே

அசுரரை முந்தித் தொலைத்த மாணவ
குறமகள் அங்கைப் பிடித்த நாயக
அரிமகள் வந்தித்து அணைக்கும் வேலவ - முருகோனே

## திருச்செந்தில் திருப்புகழ்

தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா தனதானா

செஞ்சொல் சொலுமொழி குயிலோ கிளியோ
கண்டிற்கு இனியப எிதமோ அமுதோ
தின்கச் சுவைமிகு கனியோ மதுவோ - குழல்தானோ

செம்பொற் கரமது மலரோ தளிரோ
வஞ்சிக்கு அல்குல் அரசிலையோ ரதமோ
சிந்தித்திடில் இடை உளதோ இலையோ - அலநூலோ

கொஞ்சத் தருமுகம் மதிவா ரிசமோ
அம்பைப் பொரும்விழி கயலோ கடலோ
குன்றச் சிலைஅவன் உணும்மா விடமோ - வடிவேலா

கொந்துத் தருகுழல் அரலோ முகிலோ
பந்துஏத்து எழும்முலை முடியோ கரியோ
கும்பத் தொடுமலை சிமிழோ குமிழோ - எனும்மானார்

வஞ்சக் கலவியின் மயலால் அவர்பால்
இன்புற்று அனுதினம் அலையாது உறவே
அந்திக் கணமதில் அருள்தான் அருள்வாய் - குணசீலா

மண்ணிற் தசரதன் மகனாகிய கோ
தண்டச் சிலைய்வன் மருகா குழகா
மன்றல் குழல்உமை தருமா மகனே - குமரேசா

மஞ்சுக்கு அதிபதி மகள்சேர் புயனே
தொந்திக் கரிமுகன் மகிழ்சோ தரனே
வண்ணக் குறமகள் கணவா குகனே - மயில்வீரா

மாங்குல் குலமுறு பொழில்மா மதில் சூழ்
செந்தில் பதிதனில் வளர் - வேலவனே
வந்தித் திடும்அடி யவர்பால் அருள்சேர் - பெருமாளே.

# திருவாரூர்த் திருப்புகழ்

தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த - தனதானா

மெத்து மெட்ச ணத்தை உற்ற
தத்தை யைத்த ரத்தில் வைத்து
மிக்க மிக்க நத்தி நத்தி - மயலாலே

வெற்பெ னக்க தித்து வச்ர
கச்சி னைக்கி ழித்து வட்டை
வெத்தி மத்த கத்தை ஒத்த - எழிலாலே

சித்தி ரக்கு டத்தை வட்டம்
இட்ட புற்பு தத்தை அட்ட
செப்பனெப் பணைத்து இணைத்துப் - புலவோரே

செப்ப ஒப்பு சொக்க மத்தி
அத்தி லத்து உடுக்கை ஒத்த
சிற்றி டுப்பு அடர்த்த குத்து - முலைமீதே

முத்தம் இட்டு அணைத்து இழுத்து
மெத்தை யில்ப டுத்து மெச்சி
முக்க னிச்சருக்க ரைக்கு - மகிழ்வானேன்

முச்செ கத்தில் இத்த ரத்தை
உற்ற எற்கு இ ரக்க முற்று
முட்டு செச்சை உற்ற அ வத்தை - அருள்தாராய்

உத்த மச்சி கப்பு பச்சை
முத்து வச்சி ரத்து இழைத்த
உப்ப ரிக்கை மிக்க உற்ற - திருவாரூர்

உற்ற கத்தி நெற்றியில் கண்
உற்ற நக்க னுக்கு இடத்தில்
உற்ற சக்தி பெற்று எடுத்த - பெருமாளே

# காரைக்குடித் திருப்புகழ்

தான தந்தன தந்தன தந்தன
தான தந்தன தந்தன தந்தன
தான தந்தன தந்தன தந்தன - தனதான

பூத லம்புகழ் அம்பிகை சாங்கரி
தேவி சாங்கரி தங்கைச வுந்தரி
பூர ணன்புயம் முந்த அணைந்திடு - சிவைமாதா

பூமி எண்டிசை யும்தரு சுந்தரி
மேனை தந்திடும் சுந்தரி சண்டிகை
பூசு கந்தம் அணிந்திடு கன்னிமுன் - அருள்பாலா

வேத னும்வெ(ள்)ளி அம்கிரி எம்பெரு
மானை அஞ்சலி பண்ணிய வன்வரு
வேலை கண்டுனை அஞ்சலி பண்ணிலம் - எனவேகா

வேத நின்தொழில் என்என அன்னவள்
ஓத அன்னதில் ஒன்றுசொல் என்னஅவ்
வேலை அங்குஉரை முன்சொல்ப யன்தனை - அறியாதே

சீத பங்கயம் முந்துபிர்(ர) மன்உற
வேவி லங்குக ளங்கை யொடும்கழல்
சேர வன்சிறை உன்னென முன்னிடு - குருநாதா

சீர் இலங்கையின் மன்னவ னும்குல
மோடு அழிந்திட அம்புமு னம்விடு
சீத ரன்புகழ் கண்ணன்மை வண்ணனின் - மருகோனே

காதல் தந்திடும் மங்கையர் வந்துஉனது
ஆவி என்றுஎனை அங்கவர் பங்கய
காலில் ஒன்றிடு தந்திர வஞ்சனை - செயமானார்

காமம் ஒன்றி அலைந்திடும் என்றனை
நாயி னும்கடை என்றுநி னைந்தருள்
காரை அம்பதி தன்னில் அமர்ந்திடு - பெருமாளே.

# சிறுவயல் திருப்புகழ்

தானா தனதன தானா தனதன
தானா தனதன த்ானா தனதன
தானா தனதன தானா தனதன - தந்த தானா

பாலோ கனியமு தோடே ருசிமிகு
தேனோ குயில்கிளி யாழோ நலமுறு
பாகோ மொழியது சீன(ா) நகர்உறு - கண்டுதானோ

பாரோர் புகழ்மல ரேயோ நிறைமதி
தானோ முகம்அது தாதா பசுபதி
பாகாய் முனம்வளை மேரோ குமிழ்சிமிழ் - கும்பமோடே

பூலோ கமதனில் வாதே செயவரு
கோடோ மணிதிகழ் வாரோடு அழகுறு
பூண் ஆனதும்உற நானா விதமுறு - சந்தமேலே

பூசா இளைஞர்கள் மாலே கொளஎன
வேதா தரவரு சூதோ முலையது
பூவோ கரமது தோளோ கழையிடை - மின்னல்தானோ

வேலோ இருவிழி வாளோ கடுவலை
சேலோ கடலமு தாமோ எருதினின்
மீதே வருநம னேயோ வடுவொடும் - அம்புமானோ

மீனார் கொடிமதன் தேரோ மதிஉணும்
ராகோ கடிதடம் யாதோ அறிகிலம்
மேலோர் புகழ்குழல் காரோ இருள் அறல் - எனும் மானார்

மாலே தரஅலை யாதே திருஉறு
போதாம் உனதுஇரு தாளே தருகுவை
மாதா தரவரு பாலா மயில்தனில் - உந்தும் வேலா

வான்நாடு இறைதரு மானாள் உளம் மகிழ்
வோடே புணர்வுறு சேயே புலவர்கள்
வாழ்வே சிறுவயல் மீதே வளர்வுறு - கந்தவேளே.

# வலையபட்டித் திருப்புகழ்

தான தன தத்த தன
தான தன தத்த தன
தான தன தத்த தன - தனதானா

மாமதியை ஒத்தமுக
மோடுகட லைக்கயலை
வாள்அயிலை ஒத்தஇரு - விழியோடே

மாரன்மகு டத்தினொடு
சூதுவரை செப்புஅதனை
வாதுபுரி வட்டமுலை - உறுமானார்

காமம்அதில் நித்தம் அலை
யாமல்உமை சத்திசிவ
காமிதரு புத்ர.அருள் - தருவாயே

காலமுகில் ஒத்த அரி
ஏனஉரு உற்றும்அடி
காணஅரிது உற்றசிவன் - அருள்பாலா

பாமயினும் நற்கமல
மாமயிலும் முத்தமிழ்சொல்
பாவலர்கள் சித்தர்மறை - யவரோடே

பாரிதனை ஒத்தகொடை
யாளரொடும் அத்தன்இரு
பாதமலை ரைத்தொழுகு(ம்) - மவர்மேவா

மாமுகில்கள் உற்ற பொழில்
மேவிஅழ குற்று அமர்கள்
வாழ் வலைய பட்டிவளர் - குமரேசா

மான்உதவு பொற் கொடியை
வானவரி பெற்ற வளை
வாமம் வலம் வைத்தொரு - பெருமாளே

# பீந்தசா திருப்புகழ்

தாந்த தானன தனதன தானென
தாந்த தானன தனதன தானென
தாந்த தானன தனதன தானென - தனதானா

காந்த ளேநிகர் கரம்உறு மாதரின்
ஏந்து மாமுலை மதிமுகம் மேவிய
காந்தி யானதுஎன அகம்உற வால்வரு - மயலாலே

காந்தம் ஆகிய விடம்அதிலே மகிழ்
கூர்ந்து வாழ்வுறு சிறுவன் எனாஎணி
காங்க யாசர வணபவ் சாமிநின் - அருள்தாராய்

பாந்த ளோடுஇள மதிநதி சூடிய
ஏந்த லோர்சிவ பரமனும் மாபதி
பாண்டி நாடர சதுபுரி தாணுமுன் - அருள்பாலா

பாண்டு சேய்இர தம்முன்விடு சாரதி
பூந்து ழாய்அணி கரியவன் மால்ஒரு
பாம்பிலே நடம் இடும்நெடி யோன்மகிழ் - மருகோனே

வேந்தன் ஏழ்பரி உறுரதம் மேவரு
மாந்தி மால்கவி அற அழலோனொடு
வேந்தன் நோய்முதன் எரிஎமன் ஆதிய - ரொடுமதே

வேந்தி ராதியர் அலைவுறு போதவர்
வேண்டவே அசுரரை அடு வேலவ
வேங்கை போல் நிறம்உறு குமராகுரு - பரநாதா

கூந்தலோ முகில் எனஉறு மாதுஎனும்
மான்சி காமணி ஒடுவளர் வானவர்
கோன்சி காமணி இருவரும் மேவிடு - மணவாளா

கோங்கு மாதவி மகிழ்வனம் மேவிய
பீந்த சாதனில் வளர்குக மீனவர்
கோன்மு(ன்) னாள்அருள் மகள் மகனாய் உறு - பெருமாளே

முற்றுப்பெற்றது

## வாழ்த்துச் சந்த விருத்தம்

ஒப்பனைமேவிய பொற்கொடியாம் என உற்றிடுதேவிஉமை
கொப்புடைநாயகி கைக்களிரோன்ஒடும் கொக்கடு வேலுடையன்
முப்புரம்மேவிய துட்டரைமோதிய முக்கணன் வானவரும்
இப்புவியோரோடு செப்பு எழுநூல்களும் எற்றையும் வாழியவே

முற்றிற்று

## சாற்றுக் கவிகள்

நாட்டும் தனவணிகர் நற்குலத்து உதித்து அருளைத்
தேட்டும் இராமசாமிச் செல்வன் - கூட்ட
வருமோர் தவவிரத மார்க்கத்தில் உற்ற
அருணா சலம்எனும் பேரான்.

பாம்பணிவோன் பார்வதியாள் பாலர்இரு பேர்மீது
தாம்பதிகம் ஓர்ஏழும் சாற்றினான் - ஆம் புகல்இல்
ஆழும்நிலைக்கு உரிய ஆக்கம்மிக நோக்கவரும்
ஏழு சமுத்திரம் என்போம்.

- முத்தமிழ் வித்வான் **தா. சங்கரதாஸ்,** தூத்துக்குடி

*************

வலையநகர் மலையாண்டி எனும் ஆனை
முகத்தாற்கு மானக் கங்கை
அலையு மதிச்சடை ஆரூர்த் தியாகேசப்
பெரு மாற்கும் அறுமுகற்கும்
மலையின் எழு சிறுவயல்சேர் பொன்னழகி
நாயகிக்கும் வானம் ஓங்கக்
கலைபயிலும் காரைநகர் மீனாள் கொப்
புடையாளுக்கும் கனக்க மாதோ 1

ஒவ்வொன்றாம் முதல்ஐந்து தேவதைக்கும்
கொப்புடையாட்கு ஒன்றோ டொன்றும்
பவ்வமுறும் நில வலயம் பரிந்தேத்தும்
எழுபதிகம் பரந்த கீர்த்திச்
செவ்வி பெறும் பெருங்குணத்தான் காரைநகர்த்
தனவணிகச் செல்வன் ஆகும்
அவ்வியம்நீத்து உயர்நேமக் கோயில் இரா
மச்சாமி அளித்த காளை 2

கலைமடந்தை நாமருவத் திருமடந்தை
புயம்மருவக் காரை மேவு
மலைமடந்தை மனம்மருவ வசிட்டமனை
மடந்தைஎன வளரும் கற்பின்
குலமடந்தை தனைமருவச் செழுந்தமிழின்
அவைமருவக் குணக் குன்றானோன்
தலைமடந்தைக்கு அணிமருவ அருணாச
லக்குரிசில் சாற்றி னானே 3

- ஆத்திசூடி உரை ஆசிரியர் **கோ. வைத்தியலிங்கப்பிள்ளை**, உரத்தூர்

விண்ஏறு பொழிழ்வயை விய(ன்)நகரம் அதனில்உறை
விநாயகன் சிறுவயலில் வாழ்
விமலைதிரு ஆரூரின் மேவும் தியாகேசன்
மிளிர்காரை நகர் தனிலே
மேவுகொப் புடையம்மை மீனாட்சி பீந்தசா
வேல்முருகன் இவர்கள் மேல்
விளங்குநற் பதிக மாலைகள் ஓர்ஏழ் யாத்து
விரும்பி அணிவித்தனன் சீர்ப்

பண்ஏறு பொறிவண்டின் இசைஅறாச் சந்தப்
பருப்பதம் இலங்க வயலார்
பாண்டிநன் நாடுஎனும் மகள் இலகு நுதலதனில்
பதித்தபொற் திலதம் ஏய்ப்ப
பலமணி பதித்துஇழைத் திட்டபொன் மாடநல்
பத்திகள் நெருங்கி ஆர்ந்த
பல்வளம் செறிகாரை நகர்வணிகர் தங்களுள்
பண்ணை சூழ் நேமநகரின்

கண்ணேறு மீதேறு காளகண்டன் அடிக்
கமலமுடி கொள்ளும் வகையில்
கவினுற உதித்தறம் பலசெய்து கொப்புடைய
கௌரி திரு ஆலயத்துக்
கைங்கரியம் எழில்உற முடித்துஅவள் அடிக்கமலம்
கைதொழுது ஊண் உன்பதல்லால்
கனவிலும் உண்ணாத இராமசாமிக் குரிசில்
கண்டமா தவத்து வந்த

வெண்ணேறு செந்தமிழ்க் கலைபுரைஅறத் தேர்ந்து
இசைசெறி நற்கவிகள் பாடி
எத்தலமும் அதிபுலவர் புத்தமுதம் எனமகிழ்ந்து
ஏற்றிடச் செய்யும் அறிவன்
எழில்தங்கு சற்சனர்கள் இஷ்டமே பெரிதுடையன்
இனிய பேரறங்கள் புரியும்
இன்பகுல மேஎன்றும் இலகும் அருணாசலம்
எனும் இயல் பெயரினானே

- செந்தமிழ் வித்வான் ஆ. சத்திவேல்பிள்ளை,
பாண்டியன் பத்திரிகாசாலை, இரங்கோன்.

**********

திருவளரும் வலைய நகர் ஐங்கரற்கும்
திருவாரூர்த் தியாக ருக்கும்
குருவளரும் சீர்வயல் பொன் னழகிக்கும்
பீந்தசாக் குமர வேட்கும்
மருவளரும் பதிகஆரம் ஒன்று ஒன்றும்
காரைமா நகர்வாழ் வுற்ற
உருவளரும் கொப்புடையாள் மீனாட்சிக்கு ஒரு
மூன்றும் உவந்து யாத் தான்ஆல்

கலிவிருத்தம்

நற்றவற்கு நறுந்தமிழ் வாணர்க்கு
முற்றநற்றுணை ஆனவன் உம்பரும்
பற்றுசெய் திருக் காரைப் பதிஉளான்
கொற்ற வேள்அனை யான் குணக்குன்று அன் னான்

வெண்பா

சாற்றும் தனவணிகர் தம்குலத்தான் அம்பிகையைப்
போற்றும் இராமசாமிப் புகழோன் - நோற்ற
அருந்தவத்தின் வந்தோன் அருணாசலப்பேர்
பொருந்தும் தமிழ்ப் புலவனே.

- முத்தமிழ் வித்வான்
பா.மு. பார்த்தசாரதி நாயுடு

முற்றிற்று